உ

# தமிழ்ப்பொழில்

தஞ்சைக் கரந்தைத்
தமிழ்ச் சங்கத்
திங்கள் வெளியீடு.

விசய,
பங்குனி
துணர் ௨௧ மலர் ௰௨ பகுதி

பொழிற்றொண்டர்,
இராவுசாகேப்,
S. சுயம்பிரகாசம், B. A., B. L., M. L. A.

# தமிழ்ப் பொழில்.

---

## உள்ளுறை.

திருவள்ளுவர் ஆண்டு 1984

துணர் ௨௯ விசய—பங்குனி மலர் ௰௨

1954—மார்ச்சு



சென்ற திங்கள்களில் வாராது எஞ்சிய பகுதிகள் அடுத்த திங்களில் சேர்த்து வெளியிடப்பெறும்.

---


Edited and Published by
Rao Sahib S. Swayamprakasam B. A., B. L., M. L. A., Karanthai Tamil Sangam, Tanjore. Printed by M. Ratnasami Malavarayar at The Co-operative Press, Tanjore Limited.

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| துணர் ௨௬ | திருவள்ளுவர் யாண்டு ௲௯௮௫<br>விசய—பங்குனி<br>1954—மார்ச்சு | மலர் ௰௨ |
|---|---|---|




# அகமகிழ் விழா.

முழங்கு கடல் ஞாலம் முழுதும் வரினும் வழங்கத்தவாவளத்த தாம் இத் தடம்பணை யுடுத்த தண்டமிழ் நாட்டின் அணியெனத் திகழும் விஞ்சுபுகழ்த் தஞ்சையின்கண் நிவந்த புகழுடன் உயர்ந்த தொண்டாற்றி வருவது கரந்தைத் தமிழ்ச் சங்க மாகும். அச் சங்கத்தின் கண்ணெனப் பொலிவுடன் இலங்குவது புலவர் கல்லூரியாகும். அக் கல்லூரி, சிலம்பு யாத்த இளங்கோவின் பெயரால் களங்கமறு விளக்கமாய்த் துன்னிய சிறப்புடன் மன்னியுறைவதாய மாணவர் கழகத்தின் மாண்புறு பதினாறும் ஆண்டு விழாவை 21—2—54 அன்று தமிழன்னையின் உளமேபோல இனிதே கொண்டாடி மகிழ்ந்தது. அன்று சங்கம் எங்கணும் இன்பம் பொங்கித் ததும்பியது. முல்லைக்காடு மொட்டவிழ்ந்து மலர்ந்ததுபோல மாணவர் அகமும் முகமும் எல்லையில் இன்பத்தில் மலர்ந்து மகிழ்ந்திருந்தன. மின்னொளிர் தோரணங்கள் பொன்னொளி பாய்ச்சிச் சிறுகால் செல்வனின் சீர்சால் ஊஞ்சலில் ஆடிக்கொண்டிருந்தன.

மாலை 4-மணி யளவில் விழா துவங்கியது. விழாத் தலைவர் காலந் தாழ்த்திவரும் தலைவர்கள்போலாது முற்கூட்டியே எழுந்தருளியிருந்தார். ஆம்! அவர் யார்? அவர்தான் தென்னாட்டுப் புலவர் திலகம். உயர்ந்து வளர்ந்த உடல், பருத்து அகன்ற மார்பு, கறுத்து மினுத்த நிறம், கூர்ந்து உருளும் கண்கள், குறுகி அடர்ந்த மீசை, வீரம் நிறைந்த பேச்சு, அதட்டிச் சொல்லும் கருத்து, கலைக்கு வாழும் வாழ்வு, தமிழ் மொழியின் மீது காதல், தமிழறிஞர்மீது அன்பு, தமிழ் மக்கள்மீது கவலை, தமிழ் நாட்டின்மீது ஆர்வம், பரந்த நோக்கம், விரிந்த அறிவு, உயர்ந்த ஆண்மை, சிறந்த புலமை, எளிமையான உடை, ஏறுபோன்ற நடை ஆகிய அனைத்தும் ஒன்றாகச் சேர்ந்த "உருவமாகத் திகழும் **புரட்சிக் கவிஞர் பாரதிதாசனு**வார்கள். அப்பீடுசால் பெருமகனைக் கல்லூரித் தலைவர், பேராசிரியப் பெருமக்கள், நகரப் பெரியோர்கள் சூழ, மாணவர்கள் அணி வகுத்து நின்று வரவேற்றுத் தமிழ்ப் பெருமன்றத்தின் கண்ணே அழைத்து வந்தனர்.

கல்லூரியின் தலைவர் உயர்திரு. **சுயம்பிரகாசம், B.A., B.L., M.L.A.** அவர்கள் இனிய தமிழ்ப்பா வொன்றால் உளம் நனி மகிழ்ந்து வரவேற்றார். தலைவரவர் வரவேற்புக்கு நன்றி கூறித் தன் முன்னுரையாம் பொன்னுரையைத் தொடங்கினார்கள். அவர்தம் பேருரையில் உயர்ந்த கருத்துக்களும் அரிய ஆய்வு முடிவுகளும், பரந்த நோக்கமும் அழகுற அமைந்து கிடந்தன. அக் கருத்துக் கருவூலம் இன்றைய மக்களுக்குப் பெரிதும் இன்றியமையாச் சிறப்பிற்றாகலான் அதன் சுருக்கம் கீழே தரப்படுகின்றது.

அவர் உரையாற்றுங்கால் கூறியன: யான் இதுகாறும் எத்துணை கல்லூரிகளிலும், உயர்நிலைப்பள்ளிகளிலும் சொற்பொழிவாற்றியிருக்கின்றேன். ஆயின் ஒரு கல்லூரித் தலைவரேனும், உயர்நிலைப்பள்ளி யாசிரியரேனும், இனிய தமிழில் பிழையறப் பேசி யான் கேட்டேனில்லை. இக் கல்லூரியின் தலைவர் இனிய தமிழில் பிழையற அழகுறப் பேசினார். நான் அதற்காக மிக மகிழ்கின்றேன். இக் கல்லூரியின் தலைவர் சட்டசபை உறுப்பினர் என்பதையறிய மிகமிக மகிழ்கின்றேன். இற்றை ஞான்று தமிழ் மொழியின் நிலை மிகத் தாழ்ந்துள்ளது. தமிழர்களை ஆள்கின்றவர்கள் தமிழ் அறியாதவர்கள். தமிழ் அறிய விழையாதவர்கள். தமிழறிஞர்கள் இன்று ஆளும் உரிமை பெறவில்லை என்பது மிகமிக வருந்தற்பாலதாம். இக் கல்லூரியின் தலைவர் முன்னினைவுடனும், துணிவுடனும், திராவிடக் கட்சித் தலைமைதாங்கி நடத்திச் செல்லும் நிலைமையை அடைந்துள்ளார்கள். தமிழகம் நற்றவம் புரிந்துளதோ இல்லையோ? ஆயின்

நற்றலைவரை அடையப்பெற்றுள்ளது எனலாம். கல்லூரியின் தலைவர் மிக நன்ருக இனிய தமிழில் பொருள் கனிய உரையாற்றுகின்ருர். தமிழெனில் அவருக்கு உயிரெனத் தோன்றுகின்றது.

மொழி எங்கு உயருமோ, அங்குதான் நாடு உயரும். தமிழ்மொழி முன்னேற்றம் பெருதவரையில், மொழிக்கு இடையூருன தளைகள் அறு படாத வரையில் தமிழகம் வேறெவ்வாற்ருனும் முன்னேற்றம் பெற முடியாது. தமிழ் மொழியை உயிரினும் உயர்வெனவுன்னி அனைவரும் உவந்து பயிலவேண்டும். பயிலுதற்கு வாய்ப்பளிக்கவேண்டும். உலகையே யாண்ட வுயர்தமிழ் இன்றெய்தியிருக்கும் இழி நிலையை எண்ணின், நாணி, ஒடுங்கி, அழியோமா என்று எண்ணவேண்டிய நிலையை எய்துவோம்.

திருக்கோயில்களில் தாய்மொழியாம் தமிழ்மொழி எங்ஙனம் பெருமை படுத்தப்படுகின்றது? எண்ணிப் பார்த்தோமா? சிவன் வடமொழியைப் பாணினிக்களித்து அதனை ஒப்பத் தமிழ் மொழியை குடமுனிக்களித்தார் என்பர். குமரன் தமிழ் பயின்றவன். திருமால் தமிழ்நாட்டுக் கடவுள். இவர்களுக்குத் தமிழ் தெரியாதா என்ன? இவரிடத்துக் கூறி நிறைவை வேண்டும் தமிழன் இவர்களிடம் தன் மொழியில் கூற முடிகின்றதா? இடையில் ஒரு தரகர் இருப்பார். அவர் வட மொழியில் நமக்காகப் பேசுதல் (சிபாரிசு) செய்கின்ருர். இதுவே தமிழ் மொழியின் நிலையினைக் காட்டுகின்றதன்ரே? துணியின் மாசு நீக்கும் வண்ணுன் நம் அழுக்குத் துணியை இழிவுபடுத்திஞல் நாம் பொறுக்கமாட்டோம் வந்த விருந்தினனின் மிதியடியை இழிவுபடுத்திஞல் அவன் பொறுக்கமாட்டான். ஆயின் உயிருக்கு நேராம் தமிழ் எங்கே எங்ஙனம் இழிவு படுத்தப்படுகின்றதென்பதை எண்ணிப்பார்த்தோமா? சிந்தித்திருந்தால் 'தரகருண்டா' வடமொழிச் சிபார்சு உண்டா? மீறிச்சிவனே வந்தாலும் விடுவோமா? கோயில் ஒவ்வொருவருள்ளத்தையும் பற்றிக் கொண்டிருக்கின்றது. அங்கு தமிழ் தலைகவிழ்ந்து நிலைகுலைந்து நிற்கின்றது.

அடுத்துக் கல்லூரி, பள்ளிகளில் தமிழன் நிலைமையைப் பார்ப்போம். அங்கு தமிழுக்கு உயர்வுண்டா? தமிழாசிரியர்களுக்கு உரிமையுண்டா? எவ்வித உரிமையு மற்றவராகவன்ரே இருக்கின்றனர். தமிழாசிரியன் எதற்கும் தலைமையாசிரியனையே எதிர்நோக்குவான். தமிழறியாத் தலைமையாசிரியரை என் எதிர்நோக்கவேண்டும்? இந்த நிலைமை மாற வேண்டும். தமிழாசிரியர்களுக்கு நிறைந்த உரிமை யளிக்கவேண்டுமென்ற நோக்கம் ஆழ்ந்த கருத்துக்களை உட்கொண்டது என்பது அறிவார்க்குப் புலஞக வேண்டும்.

தமிழ் நூல்களுக்கு உரையியற்றுவோர், பொருந்தாத உரைகளை வலிந்து கொடாது தமிழ்ப் பண்பாட்டிற் கேற்ப வரைதல் வேண்டும். நூலாசிரியன் உளத்திற்கு மாறுன உரையை வரைதல் கொடிய செயலாகும். காட்டாக ‘ஆதி பகவன்’ என்பதற்குப் பல்வேறுன பொருள்களை வரைவர். ஆ என்பது பகுதி, தி என்பது தொழிற் பெயர் விகுதியாகும். (ஆதல்-பொருள்) தொழிலாகுபெயராய்நின்று மூலப் பகுதியை உணர்த்தியது. பகவன் என்பதில் பகவு, பகுதி, அன் ஆண்பால் விகுதியென்பர். உண்மை உரையையே கூறவேண்டும். பொய்யும் போலியுமான வுரைகளை வரைதல் பெருந்தீங்கு பயப்பதோர் செயலாகும்.

ஆ பயன் குன்றும். அறுதொழிலோர் நூன்மறப்பர். காவலன் காவான். எனின் என்பது குறள். இதற்கு உரையாற்றிய பரிமேலழகர் அரசன் செம்மையாக ஆளாவிட்டால் பசு பால் கறக்காது அறுதொழிலோர் அத்தொழிலைச் செய்யார் என்பார். வள்ளுவர் கருத்து இது தான் என்பதை எண்ணிப்பார்க்கவேண்டும். உண்மையுரை யிதுவாகா ஆவினது பயனை என ஆறும் வேற்றுமைத் தொகையாகக்கொள்ளின் ஆப்பயன் என ஒற்று மிகுதல் வேண்டும், மிகாமையின் ஆகின்ற பயன் ஆனபயன். (ஆகும் பயன்) என்ற பொருளில் ‘ஆ பயன்’ என்பதை வினைத் தொகையாகக் கொள்ளலே பொருந்தும் ஆகாத்தோம்பி ஆப்பயன் அளிக்கும் கோவலர்’ எனும் சிலப்பதிகார அடியில் ஒற்று மிகுந்து ஆறும் வேற்றுமைத் தொகையாதல் காண்க. எனவே, அரசன் செம்மையாக ஆளாவிட்டால் அவ்வரசாட்சி ஆகும் பயன் குன்று மென்பது பொருளாம். பரிமேலழகர் கூற்றுப் படி அறுதொழிலாவன ஓதல் ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல் ஏற்றல் என்பனவாம். ஆயின் பண்டைக்காலத்தே தண்டமிழ் நாட்டின் கண் இருந்த அறு தொழிலாவன உழவு, தொழில், வாணிகம், விச்சை, சிற்பம், வரைவு என்பனவாம். “பண்டைக் கைத்தொழில்கள் வியாபாரம் எனும் தலைப்பில் ‘ஆராய்ச்சித் தொகுதியில்’ மு, இராகவய்யங்கார் எடுத்தாண்டுள்ளமை காண்க. மேற்கூறிய ஆறுமேபண்டைய அரசியற்றுறைகளாகும். அவற்றின் தலைவனே” வள்ளுவன் எனப்படுகின்றவனுவன் அதுவே வள்ளுவன் உள்ளமாகும்.

நாம் தூங்குகின்றேம் வேற்றுவர் இங்கு வந்து தம் விருப்பப்படி தங்கள் கொள்கையைப் பரப்புகின்றனர். கோவில், பள்ளி முதலியவற்

(115-ம் பக்கம் பார்க்க)

# எச்சம்.

வித்துவான், ஆ. சிவலிங்கனர், விரிவுரையாளர்,
சி. பா. சு. தமிழ்க் கல்லூரி, மயிலம்,

(துணர் 29, மலர் 8, 9, பக்கம் 25-ன் தொடர்ச்சி)

"தக்கார்......காணப்படும்" இக் குறளை நன்கு எண்ணிப் பார்க்கின் 'எச்சம்' என்பதற்குப் 'புகழ் இகழ்' என்று கோடற்கு எள்ளளவும் இடம் இல்லை என்பதை யறியலாம். புகை கண்டு நெருப்பு உண்டு எனக் கோடலைக் கருதல் அளவை என்பர் ஆன்ரோர். இக் கருதல் அளவையில் நுண்மை கலந்த வகையில் ஈண்டு அவ்வளவை ஆளப்படுகிறது. மக்களின் குணங்களால் தந்தையரின் தகவு அளக்கப்படும். மக்கள் நல்லாராயின் தந்தையர் நல்லர்; தீயாராயின் தீயர் தந்தையரைக் காணுவிடத்து அளக்கப்படுவது இது. புகழ் இகழ்களுக்குக் காரணமான அறமறச் செயல்களைக் கண்டும் தக்கார் தகவிலர் என்பனவற்றை யறிதலாம் எனின் இது புகைகண்டு நெருப்புண்டு என அறியும் அவ்வளவிலேயே நிற்பது. ஏன் எனின், புகையுள்ள விடத்தில் நெருப்பு இருப்பது ஐயத்திற்கிட மில்லாத உறுதிப்பாடு ஆதலின் என்க. கல்லூரி கட்டிய பச்சையப்பன் புகழைக் கல்லூரியின் பெயர் கேட்ட அளவிலேயே அறிவுக்கு-ஆராய்வுக்கு இடமின்றி யறிகிரேம். அண்ணமலைப் பல்கலைக் கழகம் என்ற அளவி லேயே அண்ணமலைச் செட்டியாரின் புகழை மேம்படுத்துகிரேம் பச்சை யப்பனின் எச்சமும் செட்டியாரின் எச்சமும் காண்பார்க்குக் கேட்பார்க் குச் சிந்தனையை எழுப்பாமலேயே புகழை நினைவுபடுத்துகின்றன. ஆனல் ஒருவரைத் தக்கார் என அறிய வேண்டின் அவர் மக்களைக் கொண்டு அறியுமிடத்து அம் மக்கள் எத்தகையர் என்று ஆராய்ந்து கண்டு பின் னரே ஒரு முடிபுக்கு வரவேண்டியிருக்கின்றது. எனவே மக்களைக் கொண்டு அறியுமிடத்து அறிவுக்கு வேலையுண்டு. ஒருவர் அறச்செயல் கண்ட அளவில் தக்கார் என்பதும் மறச்செயல் கண்ட அளவில் தகார் என்பதும் எளிய வாமாறுபோல மக்களைக்கொண்டு அவ்வாறு கருதுதல், கூறுதல், எளியதன்று. ஆதலின், வள்ளுவர் மக்களைக் கருதித்தான் எச்சம் என்ருர் என்னலாம்.

'மக்கள்' என்பதே வள்ளுவர் கருத்தாயின்

"தக்கார் தகவிலர் என்பது அவரவர் மக்களாற் காணப்படும்"

என எதுகை நலம் கருதியும் 'எச்சம்' என்பதற்குப் பதில் 'மக்கள்' என்றே கூறியிருக்கலாமே?

இவ்வினாவிற்கு விடைகாண வேண்டுவது இன்றியமையாததேயாம். தந்தையரின் குணம் எஞ்சிய இடம் ஆகலின் மக்கள் எச்சம் எனப் பட்டனர். தந்தையரின் குணமே முழுதும் உடையவர் மக்கள் என்பது இதன் கருத்தன்று. அதுவாயின் மக்கள் தமக்கென (தாம் முற்பிறவியில் செய்து கொண்ட வினையிலராய்த் தந்தையரின் வினையே யுடையர் எனப் படுவர். அவ்வாறு எந்நூலும் கூறவில்லை. அதனால் தந்தையரின் வினைக் கேற்ப அவர் குணங்களும், அவர் குணம் எஞ்சியிருக்கும் வகையில் ம் வினைக்கேற்ப உள்ள குணங்களும் உடையர் மக்கள். அதனால் தந்தை யரின் குணமும் தம் குணமும் உடையர் என்னலாம். இக் குணங்கள் தக்கார் மக்களாயின் ஒத்தனவாகும். இல்லையேல் மாறியும் ஒத்தும் காணப்படும். இவ்வகையில்தான் ஒருவனுக்கு இரண்டு குணங்களும் இயைந்திருக்கும், வள்ளுவர் 'மக்கள்' என்று கூறிவிட்டாரானல் 'தந்தையர் குணம் எஞ்சியவர்' என்ற கருத்துப் புலப்படாது. 'எச்சம்' என்றதால் அது புலப்படுத்தலோடு தமக்கெனவும் (தாம் செய்தவினையால்) குணங்கள் உடையர் என்பதும் பெற வைத்தமை காணலாம் ஆதலின் 'எச்சம்' என்றதே சிறந்ததென்க.

(2)

செப்ப முடையவ னாக்கம் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து. (112)

இக் குறளில் வந்த 'எச்சம்' என்பதற்கும் சிலர் 'புகழ்' எனக் கொள்வர். ஈண்டு மக்கள் அல்லது வழியினர் என்பதே சிறக்கும் என்னலாம்.

பரிமேலழகர்,

"நடுநிலைமை யுடையவனது செல்வம் பிறர் செல்வம் போல அழி வின்றி அவன் வழியிலுள்ளார்க்கும் வலியாதலுடைத்து"

என உரை கூறி,

"விகாரத்தால் தொக்க எச்ச உம்மையான் இறக்குந் துணையும் அவன் தனக்கும் ஏமாப்புடைத்து என்பது பெற்றும்"

என விசேடமும் கூறினர். மணக்குடவரும்,

"நடுவுநிலைமை யுடையவனது செல்வம் தன்னளவிலும் கேடின்றியே நின்று தன் வழியிலுள்ளார்க்கும் கேடு வாராமற் காவலாதலை யுடைத்து"

என்றனர். இக்குறளின் சொற்களின் அமைப்பை நன்கு எண்ணினுல் ஈண்டு 'எச்சம்' என்பதற்குப் 'புகழ்' என்றல் பொருந்தாதென்னலாம்.

ஆக்கம் செப்பம் உடையவனுடையது. செப்பம் உடையவன் செல்வம் மேன்மேலும் ஆகுதற்கு அதாவது பெருகுதற்குரியதாதலின் 'செப்பம் உடையவன் செல்வம்' என்னுது 'ஆக்கம்' என்ருர் வள்ளுவர். அவன் தன் ஆக்கத்தினை எவ்வாறு பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்பதனை யறியாதிரான். அறிந்து பயன்படுத்துவதாலும் அவன் செப்பம் உடையவனுவான். அவன் தன் செல்வத்தைக் கொண்டு ஓர் அறச்செயல் புரிவான் என்ருல் அவ்வறம் நிவந்தம் முதலியவற்ருல் நிலை பெறும்படிச் செய்வான். அவன் மறையினும் அவன் செல்வம் அவ்வறத்தினைக் காக்கும். அச் செல்வம் அரசு மாறுதல் முதலிய காரணங்களால் சிதைந்து அவ்வறச் செயலுக்குக் கேடு நேர்ந்தாலொழியத்தான் அழியாது. அதற்குக் காவலாக இருக்கும். செல்வத்தைப் பயன்படுத்தி அதனுல் அறம் அழியாதபடி நிலைநிறுத்திய பெருமை செப்பம் உடையவனைச் சாரும். அவ்விடத்துச் செல்வத்திற்குச் சிறப்பில்லை யென்பதைக் கூர்ந்து அறிய வேண்டும்.

'எச்சம்' என்பதற்கு 'மக்கள்' எனக் கொண்டால் செல்வத்திற்குச் சிறப்பும் அதன் வழியாகச் செப்பமுடையானுக்குச் சிறப்பும் பெறலாம். செப்பமுடையவர் மக்கள் நல்லவராவர். ஆதலின் அவர் மக்கள் அச் செல்வத்தை நன்கு பயன்படுத்திக் கொள்வர். அன்றியும் அது எக் காரணத்தாலும் சிதையாமல் காத்துக் கொள்வர். எனவே என்றும் அது சிதையாது. அன்றியும் மேலும் பெருகும். எனவே செப்பமுடையவன் செல்வம் சிதைவின்றியும் பெருகியும் சிறக்கும். அது மக்களுக்கும் காவலாதலை யுடையது. காவல் இடையூறு வருமுன்னும் வந்த பின்னும் நிகழ்த்தற்குரியது. அறச்செயலுக்குரிய செல்வம் அவ்வறம் அழியாதபடிக்காக்கும் தான் அழியாதிருந்தால். அதனுல், தான் அழியாதிருக்க வேண்டும். அன்றியும் தான் கொடுக்கும் வளம் குறையின் அவ்வறச் செயலும் குன்றும். அச் செல்வம் மக்களுக்கானுல் அவர்களால் தான் காக்கப்பட்டுச் சிதைதலின்றிப் பெருகி வளம் மிகுதியாகத் தந்து அவர்களையும் காக்கும். ஊழ் காரணமாக அவர்கட்கு இடையூறு நேருமாயி

னும் அதனையும் அது போக்கும். எனவே அறச்செயலுக்கமைக்கப்பட்ட செல்வம் வருமுன் காக்கும் பண்பினது; மக்கட்குரிய செல்வம் வந்த பின்னும் காக்கும் பண்பினது என்க.

ஏமாப்பு என்ற சொல்லுக்குக் காவல், இன்பம் என்ற இரு பொருளும் உண்டு. காவல் பெற்றவர் இன்புறுதல் இயற்கையே. காவலாற் பெறும் இன்பத்தைப் பெறற்குரியார் மக்களாதலின் அச் செல்வப் பயனை நிரம்பப் பெற்றவர் மக்களாவர். இதனானும் எச்சம் என்பதனுக்கு 'மக்கள்' எனக் கோடலே சிறக்கும் என்னலாம்.

(3)

மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்கு
இல்லைநன் றாகா வினை (456)

இக்குறளுக்குப் பரிமேலழகர்,

> மனந்தூய ராயினார்க்கு மக்கட்பேறு நன்றாகும்; இனம் தூயாராயினார்க்கு நன்றாகாதவினை யாது மில்லை.

என உரை கூறிக் "காரியம் காரணத்தின் வேறுபடாமையின் எச்சம் நன்றாகு மென்றும், நல்லினத்தோ டெண்ணிச் செய்யப்படுதலின் எல்லா வினையும் நல்லவாம் என்றும் கூறினார்" என விசேடம் கூறினர் மணக்குடவர்,

> மனநல்லார்க்குப் பின்நிற்கும் காணம் முதலான பொருள்கள் நல்லவாம்; இன நல்லார்க்கு நன்றாகாததொரு வினையும் இல்லை.

என உரை கூறினர்.

> "மன நல்லார்க்குப் புகழ் நன்றாகும்; இன
> நல்லார்க்கு நன்றாகா வினையில்லை"

என்று கூறுவாருமுளர். இனி இவற்றைச் சிறிது காண்பாம்.

மன நல்லார்க்கு எச்சம் அதாவது புகழ் நன்றும் என்று கூறுவது பொருந்துமேனும் சிறவாது என்னலாம். பின் இன நல்லார்க்கு நன்றாகா வினையில்லை என்பதைக் காணுதல் வேண்டும். புகழ் என்பது ஒருவன் செய்யும் வினை காரணமாக வருவது. நல்வினை செய்த விடத்திலேயே அதாவது புகழ்க்கேதுவான வினை செய்தவிடத்திலேயே புகழ் நிற்கும் என்னலாம். காரணத்தைச் செய்த அளவில் தானே வந்தெய்தும்.

காரணம் நல்லதாயின் காரியம் நன்றாம்; தீயதாயின் தீயதாம். எனவே, இன நலத்தால் வினை நன்றாயின் புகழ்தானே வந்தெய்தும். அதற்கு மன நலம் கூறத்தேவையில்லை காரணத்திற்கோர் நலமும் காரியத்திற்கோர் நலமும் கூறுதல் மாறன்றோ? ஆதலின் இன நலம் ஒன்றற்கும் மன நலம் ஒன்றற்குமாகக் கோடலே நன்றாம். எனவே வினை காரணமாகவரும் புகழ் கருதி' எச்சம்' என்றார் வள்ளுவர் என்பது பொருந்தாதாம்.

மணக்குடவர் ''பின்பு நிற்கும் காணம் முதலான பொருள்கள்' என்றதும் பொருந்துவதன்றாம். இன நலம் நல் வினையையே தரும். அதனால் அவ்வினையால் ஈட்டப்படுவனவும் நல்லனவாம். எனவே பின் னிற்கும் காணம் முதலியவற்றிற்குத் தனித்து மன நலம் கூறத் தேவை யில்லை வேறு ஒன்றற்குரிய தென்க அது பரிமேலழகர் கூறிய 'மக்கள்' என்பதாம். 'எச்சம்' என்பது தனக்குப்பின் எஞ்சுவது எனக்கொண்ட தால் ''காணமுதலாய பொருள்கள்'' என்றார் மணக்குடவர். தான் உள்ளபோதும் தன் குணம் எஞ்சிய இடம் எனக்கொண்டதால் 'மக்கள்' என்றார் பரிமேலழகர். தான் உள்ளபோதே காணும் வாய்ப்புடைமையின் 'எச்சம்' என்பதற்கு 'மக்கள்' எனக்கோடலே சிறக்குமன்றோ? அவ் வாறு கொள்வதால் இரண்டு நலங்களுக்கும் தனித்தனி பயன்கள் உண்டு எனக் கொள்ளலாம்.

மனந்தூயார்க்குக் குணங்கள் எஞ்சியவராகிய மக்கள் நல்லவராகவே தோன்றுவர் ஆதலின் சொல்லவேண்டாமே என்னலாம். முன் ''தக்கார் தகவிலார்'' என்ற குறளில் வந்த எச்சத்திற்குக் கூறியதை ஈண்டு நினைவுபடுத்திக் கொள்ளுதல் வேண்டும். தந்தையர் குணங்கள் எஞ்சி யவர் எனினும் தாம் எடுத்த பிறவிக்கு முன் பிறவிகளில் தாம் செய்த வினைகள் காரணமான குணங்களும் உடையர் மக்கள் ஆதலின் அம் மக்கள் தம் குணங்களிலும் நல்லர் ஆவர் என்பதைக் கருதிக் கொள்ளுதல் வேண்டும். ஆதலின் இக் குறளிலும் 'எச்சம்' என்பதற்கு 'மக்கள்' எனக்கோடலே சிறக்கும் என்னலாம்.

---

# ஆங்காங்கே (19)

---

கோ. தியாகராசன், G. M. V. C.,
தெற்கலங்கம், தஞ்சை.

---

## I ஏ.

'ஏ' என்னும் எழுத்து ஒரு சொல்லிற்கு முதலில் இருந்து 'மேல்' (up-above-forward) என்னும் பொருளைப் பலச் சொற்களுக்குத் தருகிறது.

(1) ஏ—அம்பு. இவ்வம்பு பெரும்பாலும் முன் நோக்கியாவது, மேல் நோக்கியாவது எய்யப்படுவது.

(2) ஏகு—மேலே போ (Go-forward)

(3) ஏகல்—உயர்ச்சி (எ. கா) 'ஏகல்வெற்பன்'

(4) ஏடு—பாலின்மேல் படர்ந்திருக்கும் ஆடை.

(5) ஏணி—மேலேறுவதற்குத்துணையாகும் மரப்படி.

(6) ஏர்—மண்ணை மேலே கிளப்பி முன் செல்வது.

(7) ஏலம்—ஒருவர் கேட்டவிலைக்கு மேலாகவோ, அல்லது மேலான தள்ளுபடியாகவோ விலை கூறல்.

(8) ஏல்—ஏல் ஏலோ-ஏலேலோ-படகு ஓட்டிகள் தண்டு வலிக்கும்போது ஒன்றுசேர்ந்து கூவுவது. அதாவது 'மேலே போ' எனக் கூவுவதாகும். (Pull forward)

(9) ஏந்து—கைகளை மேலே தூக்கு.

(10) ஏப்பம்—வயிற்றிலுள்ள உணவோ, காற்றோ மேலேறி வாயின் வழி வெளிவருவது.

(11) ஏ×மாற்றம்—ஏமாற்றம். பண்ட மாற்று வழங்கிய காலத்தில், ஒரு படி நெல்லுக்கு இரண்டுபடி உப்பு மாற்றுவது ஒத்த மாற்றமென (fair exchange) வைத்துக்கொள்வோம். இவ்வாறு ஒப்ப மாற்றாமல், ஒரு படி நெல்லிற்கு மூன்றுபடி உப்போ, அல்லது இரண்டுபடி நெல்லிற்கு இரண்டுபடி உப்போ மாற்றப்

படுமானல் இது ஏமாற்றமாகும். (மிகுந்த மாற்றம்) பின் இச்சொல் (disappointment) என்னும் பொருள் பெற்றது.

(12) ஏராளம்—மிக்க மிகுதி.
(13) ஏர்ப்பு—எழுச்சி
(14) ஏ + கழுத்து—ஏக்கழுத்து—மேலே தூக்கிய கழுத்து.
(15) ஏ + குரல்—ஏக்குரல்—மேலே தூக்கிய குரல்.
(16) ஏறு—மேலே போ.
(17) ஏறு—காளைமாடு—வீட்டு மாக்களில் மேலானது.
(18) ஏறு—சிங்கம் காட்டு மாக்களில் மேலானது.
(19) ஏற்றல் அல்லது ஏத்தல்—மேலாகப் பேசுதல்.
(20) ஏந்தல்—மக்களில் மேலானவன்.

## II செ.

'செ' என்னும் எழுத்து ஒரு சொல்லிற்கு முன்னின்று செகப்பு என்னும் பொருள் தருகிறது.

செ + கல்—செங்கல், செ + வானம்—செவ்வானம், செ + மண்—செம்மண், செ + ஞாயிறு—செஞ்ஞாயிறு.

இவ்வாருக இவ்வெழுத்து இச் சொற்களுக்கு செகப்பு என்னும் பொருள் தருகிறது. எனவே நாம் சிகப்பு அல்லது சிவப்பு எனச் சொல்வது பிழை. செகப்பு அல்லது செவப்பு என்னுஞ் சொற்களே சரியான சொற்கள்.

மற்றும், மிக்கப் பழையகாலத்தில் நம் பண்டை மக்கள் போரில் புண்பட்டு, அவர்கள் உடலினுள்ள செங்குருதி மிகக் கழிந்து இறந்ததைக்கண்டு, இச் செங்குருதியே மக்களுக்கு மிகச் சிறந்ததெனவும், குருதி கழிந்த மக்கள் உயிருடனிருந்தாலும் அவர்கள் வலியற்று செயலற்றிருப்பதைக் கண்டு இந்நிறம் சிறந்ததெனக்கருதினர். இது போலவே எகிப்தியரும், சீனரும், ஐரோப்பியரும் இந்நிறத்தைச் சிறப்பாகக் கருதுகின்றுர்கள். ஆரியரும் தங்களுக்குத் தறுகண், செல்வம் முதலியவற்றைத்தரும் தெய்வத்திற்கு (திருமால்) செந்நிறம் தந்தனர்.

பின்னும், தாங்கள் பகுத்துக்கூறும் முக்குணங்களில் ஆற்றலையும், சுறுசுறுப்பையும் உடைய குணமாகிய ரஜஸ் (Rajas) என்பது செந்நிற மென்பர்.

நாமும், உடல் நலங்கெட்டு, செங்குருதி குறைந்த ஒருவனைப் பார்த்து இரத்தம் செத்தவன் என்கிறோம். அதாவது வலுவற்றவன் என்கிறோம். எனவே இரத்தம் குறையாதவன் வலுவுள்ளவனாவான். ஆங்கிலர் தாம் சிறந்ததாகக் கருதும் நாளை செகப்பு நிறத்தால் குறிப்பார்கள். (red letters day) சீனர்கள் மிக்க மகிழ்ச்சியாகக் கொண்டாடும் புத்தாண்டின் பொழுது செகப்புத்தாளில் காசை மடித்துக் கொடுப்பார்கள்.

நாம் நம் தமிழைச் 'செந்தமிழ்' அல்லது 'செம்மொழி' என்பது சிறந்த மொழியெனப் பொருள்படுமேயொழிய செகப்பு மொழியெனப் பொருள்படாது, இதற்கு எதிர்மொழி "கொடுந் தமிழ்"

இவ்வாறாக 'செ' என்னும் எழுத்து முதலில் செகப்பு என்னும் பொருளையும், பின் சிறப்பு என்னும் பொருளையுமேற்று நம்மிடை வழங்குகிறது.

## III. பேம்.

'பேம்' அச்சமுறுத்தல். நம் சிறுவர்கள் வெளியிலிருந்து வரும் ஒரு சிறுவனைக்கண்டவுடன் வீட்டின் கதவிற்குப் பின்னால் ஒளிந்திருந்து மற்றவன் உள்ளே வரும்போது பே-ஏ-ஏ எனக் குரலிடுகிறார்கள். வந்தவன் திடுக்கிட்டு அரற்றுகிறான்' இது போலவே நம் முன் திடுமெனத்தோன்றி நம்மைத் திடுக்கிடச் செய்து அச்சமுறுத்தும் ஒரு தோற்றத்தை நம் முன்னோர் பேய் என்றனர்.

## IV. உடை—ஒடி.

உடை என்பது சுக்கு சுக்காக அல்லது சில்லுச் சில்லாக ஒன்றைத் தகர்த்தல் அல்லது உடைத்தலாகும் ஒடி என்பது ஒன்றை வளைத்து இரண்டு துண்டங்களாக்குவது அல்லது ஒடித்தலாகும். எனவே ஒடிந்த மரக்கிளையை, பின்பு விறகிற்காக

சுக்கு சுக்காக உடைக்கிறோம் இதுபோல நம் செம்மொழியில் கருத்துக்களை நன்கு விளக்கத் தக்க சொற்களிருந்தும் அச் சொற்களைத் தக்கபடி பயன்படுத்தாதது தமிழரின் குற்றம்.

## V. சந்து—பொந்து—கந்து.

நம் மொழியில் சொற்களமைந்த வகைகளில் ஒரு தனி வகையுண்டு. அதாவது :— மேற்காட்டிய சந்து-பொந்து-கந்து என்னுஞ் சொற்களில் முதல் எழுத்துக்கள் வேறுபட்டும், ஏனைய எழுத்துக்கள் ஒன்றுபட்டுமிருக்கின்றன.

இவைகளில் முதல் எழுத்துக்கள் வேறுபட்டது போல இச் சொற்களில் பொருள்கள் வேறுபட்டன வென்பது வெளிப் படை. மற்ற எழுத்துக்கள் ஒன்றுபட்டது போல இச் சொற் களால் குறிக்கப்படும் பொருள்களில் ஊடுருவிச் செல்லும் இடை வெளி உண்டென்பதும் தெரிகின்றது.

'சந்து' என்பது ஒரு பொருளுக்கும் அடுத்ததிலிருக்கும் மற்றொரு பொருளுக்கும் இடையில் உள்ள வெளியைக் குறிப்ப தாகும். ஒரு வீட்டிற்கு அடுத்த வீட்டிற்கும் இடையில் வெளி யுண்டானால் அது சந்தாகும். இச் சந்து தெருவிலிருந்து அவ் வீட்டின் கொல்லைக்கோ அல்லது அடுத்தத் தெருவிற்கோ போவ தற்கு வழி கொடுக்கவேண்டும். 'பொந்து' என்னும் இடத்தில் உட்புக இடமுண்டு. ஆனால் கொல்லைக்கோ அல்லது அடுத்த தெருவிற்கோ போவதற்கு வழியில்லை. அதாவது பொந்தின் ஒரு பக்கம் பொத்தியிருக்கும். எனவே, இது பொந்தாயிற்று. இதை ஆங்கிலத்தில் 'blind alley' என்பர். 'கந்து' என்னும் சொல்லிற்கு 'துளை' என்னும் பொருளுண்டு. எனவே ஒரு ஆடையில் பல துளைகளிருந்தால் அந்த ஆடை கந்தையாகும். கந்துகள் உள்ள ஆடையாகையால் இத்தகைய ஆடையை கசக்க வேண்டும் துவைக்கக் கூடாது துவைத்தால் கந்துகள் பெரியவை யாகி ஆடை கிழிந்துவிடும். ஆகையால் தான் நம் முன்னோர் "கந்தையானாலும் கசக்கிக் கட்டு" என்றனர்.

மற்றும், 'கந்து' என்னுஞ் சொல்லிலிருந்து 'கந்தை' என்னுஞ் சொல் வந்தது போல, 'சந்து' என்னுஞ் சொல்லி லிருந்து 'சந்தை' என்னுஞ் சொல் வந்தது. சிற்றூர்களில் கூடும் சந்தைகள் பெரும்பாலும் மாந்தோப்புகளில் கூடும். இவ்

விடத்தில் கூல வாணிகரும், மற்றோரும் தாங்கள் விற்பதற்குக் கொண்டுவந்த பொருள்களை வரிசை வரிசையாக வைத்திருப் பார்கள். ஒரு வரிசையிலிருந்து அடுத்த வரிசைகளுக்குப் போக இடை இடையே சந்துகள் பல உண்டு. இவ்வாறு பல சந்துகள் உள்ள இடம் 'சந்தை' யெனப் பெயர் பெற்றது போலும். இன்னும், தெருவும் சந்தும் கூடுமிடம், 'சந்தி' எனப் பெயர் பெறுகின்றது. எனவே 'முச்சந்தி' என்னுஞ் சொல் நம்மிடை வழங்குகிறது. பின் 'சந்தி' என்ற சொல் புணர்ச்சி அல்லது சேர்க்கை என்னும் பொருள் பெற்றது. 'சந்தி' யென்னுஞ் சொல் தனித் தமிழ்ச் சொல்லே.

## VI. ஓர்ந்துணர்தல்.

'ஓர்' என்னுஞ் சொல்லிலிருந்து வருவது 'ஓர்' என்னுஞ் சொல். இச் சொல்லிலிருந்து வருவது "ஓர்மை" என்னுஞ் சொல். ஒரு குடியில் உள்ளவர்கள் ஓர்மையாக வாழ்கின்றார்க ளென்றால், அவர்கள் ஒரே கருத்தும், குறிக்கோளும் உடைய வர்களாய் ஒற்றுமையுடன் வாழ்கின்றார்களென்பது பொருள். எனவே, 'ஓர்ந்துணர்தல்' என்பது தன்மானமும் அறிவும் ஒரே கருத்தில் ஒன்றி உணர்வதாகும். மனமும் அறிவும் ஒரே கருத்தில் ஒன்றுவதை ஆங்கிலத்தில் (coveetration) என்பர்.

## VII. அலை.

'அலை' ஒருவன் நம் இல்லத்திற்கு முன் பலதாம் போய் வந்துகொண்டிருப்பானாயின், அவன் அலைவதாகச் சொல்கிறோம்.

**அலை** மேற்கூறியது போலக்கடலின் நீர் கரையின் மேலேறி பின் அந் நீர் கடலிற்போய் கலந்து, பின்னும் இவ்வாறு ஏறி யிறங்குவதைக் காணும் நாம் அந்நீர் அலைவதாகக் கருதி அவை களை அலைகள் என்கிறோம். (வினையிலிருந்து பெயர்ச்சொல் வந்தது.)

**அலை** :- கடற்கரையில் அலைகள் மோதி மோதி, அங்குள்ள மணற்பாங்கு கடலில் உள்ள அலைகள் போல மேடும் பள்ளமு மாக வரிவரியாகயிருக்கும். எனவே இப் பரப்பிற்கு 'அலை' என்னும் பெயர் வந்தது.

மேற்காட்டியவைகளை புலவர்கள் ஆராய்க.

---

நின் நிலை தமிழ் மொழியை நோக்கத் தாழ்ந்தேயுள்ளது. மிகத்தாழ்ந்தே உள்ளது என்னலாம். தமிழன் கேட்டவர்க்குக் கேட்டவை கோட்டமின்றி வழங்கும் தன்மையன். தமிழன் அன்பு காரணமாக ஏமாற்றம் அடைந்தான். வந்தவர்க்கெல்லாம் இடமளித்த தமிழன் இன்று வாட்டமுற்றுக் கிடக்கின்றான்.

இன்று மாணவர்களிடை இலக்கணப் பயிற்சி மிகவும் குறைந்து காணப்படுகின்றது. இலக்கணம் தெளிவாகத் தெரியாது வேறு எவ்வளவு கற்றிருப்பினும் அதனால் பயன் யாதுமில்லை. தமிழில் சொல் ஒவ்வொன்றும் எதனை உட்கொண்டு நிற்கின்ற தென்பதை இலக்கண அறிவின்றி அறிய வியலாது தமிழ்ச்சொல்லை இலக்கண நெறியோடு ஆய்ந்துபார்த்தே தமிழரின் பண்பாட்டை அறியலாகும். காட்டாக நிலம் உள்பொருள் எனப்படும். நிலப் பகுதி அம் விகுதி அழியாதது என்பது பொருள். உலகம் என்ற சொல் உலோகம் என்ற சொல்லின் அடிப்படையில் பிறந்த தன்று. உலகம் உலத்தல் என்ற சொல்லின் அடிப்படையில் பிறந்ததே யாகும். உலத்தல், துன்பத்தைக் கொடுப்பதாம். அடுத்து, அமிழ்தம் என்ற சொல் அமிழ்து வினைத்தொகை நிலைத் தொடராகும். மேலிருந்து விழுகின்றதாகிய உணவு என்பதாம். (து-உணவு) இலக்கணமுடையோன் மழையென உணருவான். அமிர்தம் என்ற வடமொழியின் திரிபன்று குறளில் வானின்றுலகம் வழங்கி வருதலான் தானமிழ்தமென்றுணரற் பாற்று என்பதும் அது.

நான் இங்கு பேசுங்கால் நம் தமிழ் மொழியின்நிலை என்ற முறையாற்றான் பேசுகின்றேன். அரசியல் முறையிலன்று. இந்தியாவில் இரு பெரும் நூல்களுள்ளன. ஒன்று பகவத் கீதை வடமதுரைக் காதாரமானவர் செய்தது. வட நாட்டார் அந்நூலின் முறைப்படி ஒழுகுவர் 'இப்பக்கம் மாதானுபங்கி' என்பதால் நாம் வள்ளுவரையே பின்பற்றவேண்டும்.

நல்ல முறையில் தமிழ் செழித்து வளரத்தடைகள் இருத்தல் கூடாது. இலக்கணப் பயிற்சி வலியுறுத்தப்படவேண்டும்.

தெய்வம் என்ற சொல்லில் தெய், பகுதி; அம், விகுதி, வ், என்பது எழுத்துப்பேறு, இது வட சொல்லன்று. தெய்யென் கிளவி கொள்ளலும் கோறலும் என்பது பிங்கல நிகண்டு. தொல்காப்பியத்தில் வகர யகர மயக்கத்திற்கு எடுத்துக் காட்டாகத் தெய்வம் என்ற சொல் காட்டப்பட்டுள்ளது. பண்டு அழிவுக்காட்சியை (தீ, பெருங்காற்று பெருமழை) தெய் என்ற சொல்லால் வழங்கி வந்தனர் (கள்வர் கொள்ளையிடலுமது) பிறகு மழையின் பயனை யுணர்ந்து நெருப்பின் பயனை யுணர்ந்து கருவிகள் பல செய்தனர். இவ்வாறு உயர்வு ஏற்படவே அவற்றை உயர்வாக எண்ணினர்கள். நிலவையும் கதிரவனையும் பாராட்டினர். ஆயினும் பழைய 'தெய்' என்னும் பெயராலேயே அழைத்தனர். பின்னர் இவற்றையெல்லாம் ஆக்கி அழிக்கும் ஒன்றைத் தெய்வம் எனவும் கடவுள் எனவும் கொண்டனர். இவ்வாறு சொற்களைப் பகுத்துப் பகுத்து ஆய்ந்து ஆய்ந்து பொருகாண

இலக்கணப் பயிற்சி எங்ஙனம் இன்றியமையாதது என்பதனை யுணர்த்தவே இவ்வெடுத்துக் காட்டுகளைக் காட்டினேன். தமிழ்ப்பள்ளிகளில் கட்டாய இலக்கணப் புயிற்சி இருந்தாற்றான் மொழிப்பயிற்சி பயனுடையதாக விருக்கும். நாடும் மொழியும் முன்னேறும்.

அடுத்தபடி இன்றைய படக்காட்சியின் நிலையைக் காண்போம். தமிழறியாதவனே இடம் பெறுகின்றான். "இன்றியமையாச் சிறப்பின வாயினும் குன்றவருபவிடல்" என்பது குறள். இக்கருத்தையுணரல் வேண்டும். தமிழன் பண்பாட்டைப் புண்படுத்தும் கொள்கைகளைக் காட்டக்கூடாது. புரட்சிக்கருத்தென்றால் என்ன? பொதுமக்களுக்கு நலம் நல்குவதெனத்தன்னால் கருதப்படும் கருத்தை ஒருவன் (சட்டத்தையும்) அரசியலாரையும் புறக்கணித்துத் தன்னலம் துறந்து செய்வதே யாம். தன் வயிற்றுக்காகவும், தன்னுடைய வாழ்வின் மேம்பாட்டுக்காகவும் சட்டத்தையும் அரசியலையும் புறக்கணிப்பது புரட்சியேயல்ல.

இன்று கதை எழுதுவோன், வழிகாட்டி நடத்துவோன் யாவரும் தமிழ்ப் பண்பாட்டை அறியாதவர்கள். இன்று வாழ்க்கைநிலை, உணவு, படக்காட்சி, உடை, என்கின்ற முறையில்தான் அமைந்துள்ளது. உணவுக்குச் செலவிடும் பொருளைக்கூடப் படம்பார்க்க இன்றைய மனிதன் செலவிடுகின்றான். இந்த நிலை விரும்பத்தகாததாகும். தமிழ் நாட்டின் பண்பாடு, கலை முதலியவற்றைச் சிதைக்க இன்றைய படக்காட்சி பயனாகவுள்ளது. வெளிநாட்டான் ஒருவன் இந்த நிலையைக் கண்டால் 'தமிழகம்' என்றொரு நாடுண்டு என்பதையே மறுத்துவிடுவான். நல்ல இசைவளர்த்த தமிழ்நாட்டில் வர்ணமெட்டுகள் தோன்றியுள்ளன. அவை உள்ளத்தைத் தூண்டுகின்றனவா? படத்தில் வருபவர் அணிவது மேல்நாட்டுடை, ஆடுவது மேனாட்டு ஆடல், பேசுவதும் பிறிதோர்மொழியில். இவை விரும்பத்தக்கனவா? தமிழ்நாட்டிற்குரிய உடை, மொழி, நடை, ஆடல் அனைத்தும் அழிந்தனவேயோ? தமிழ்ப்படத்தில் நடிப்பவர் வேற்றுநாட்டவர். அவர் எங்ஙனம் தமிழ்ப் பண்பாட்டை, உள்ளத்தை நடித்துக்காட்டுவார்? உணர்ச்சி எங்கே பிறக்கும்? எனவே தமிழின் பெயர் எத்துறையினும் இழிவுபடுத்தப்பட்டுள்ளது. மறைக்கப்பட்டுள்ளது.

இனி மதத்துறை. அங்குத் தமிழின் நிலையென்ன? ஆதீனத்திலுள்ளவர்களைச் சமயச்சார்பாகக் கடவுள் அனுப்பியிருந்தால் மகிழ்வு. ஆயின் அங்ஙனம் அவர்கள் நடப்பதில்லையே. கட்டிட நிதிக்கு பொருள் உதவிவேண்டிய ஆதினத்தார் ஒருவர் வடமொழியிலன்றோ கையெழுத்திட்டிருந்தார். தமிழ் வட சொல்லிலிருந்து வந்ததென்பர் வடவர். சோழவந்தான் சண்முகம் பிள்ளை இலக்கணக் கொத்திலுள்ள அச்செய்தியை மறுத்ததால், உடனே ஆதினத்தார் ஒருவரை அழைத்து வந்து சண்முகம் பிள்ளைக்குத் தொல்லைகள் அளித்தனர். எனவே மடாதிபதிகளும் தமிழன்பர்கள் போல நடிப்பரேயன்றி உண்மைத் தமிழ்க்காதலராகார்.

அடுத்து இன்றைய செய்தித் தாள்களை எடுத்துக்கொள்ளுவோம் வேற்று மொழியையே மிகுதியும் கலந்து எழுதுகின்றனர். நல்ல தூய அழகிய தமிழ்ச் சொற்களிருக்கும்போது வேற்றுமொழிச் சொற்களை நாடுதல் அறிவுடைமையாகுமா? எனவே நல்ல தமிழில் செய்தித் தாள்களை வெளியிடவேண்டும். தமிழறிஞர்கள் செய்தித்தாள்களை வெளியிடல் வேண்டும்.

தமிழ் மாணவர்கள் நன்ருக இலக்கணம் பயிலவேண்டும். தமிழர்கள் அனைவரும் தமிழ் கற்கவேண்டும் அவ்வாறு கற்று மொழியறிவு பெருகினுலொழிய மொழியும், நாடும் முன்னேருது ' எனக்கூறித் தன் முன்னுரையாம் பேருரையை முடித்தார்.

## II

அடுத்த நிகழ்ச்சியாக நிழற்படமெடுத்தல் நடந்தது. விழாத்தலைவர் சங்கத் தலைவர், முன்னுள் கல்வித் தலைவர், ஆசிரியர், மற்றுமுள்ள கல்லூரிப் பேராசிரியர்கள், கல்லூரி மாணவர்களடங்கிய நிழற்படமெடுக்கப் பட்டது.

இச்சிறிய இடைக்கால ஓய்வுக்குப் பின்னர் கூட்டம் மீண்டும் கூடியது. கல்லூரியின் தலைவராகவும், பேராசிரியராகவும், சங்க அமைச்சராகவும் இருந்து அருந்தொண்டாற்றி மறைந்த கரந்தைக் கவியரசு அரங்க வேங்கடாசலம் பிள்ளையவர்களின் உருவப் படத்தை, முன்னுள் கல்லூரித் தலைவரும், இதுபோழ்து அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராகத் தொண்டாற்றி வருபவருமாகிய திருவாளர் புலவர் உ. பழநி M. A. அவர்கள் திறந்து வைத்து, அப் பெரியாரின் நல்லியல்புகளையும், சிறந்த புலமையையும், பரந்த எண்ணத்தையும் குறித்து ஒரு அரிய சொற்பொழிவாற்றினுர்கள்.

அவர் பேசியன: " கரந்தைத் தமிழ்ச் சங்கம் தலையாய தொண்டு புரிந்து வருகின்றவோர் சங்கமாகும். அது திட்பமும் நுட்பமும் பெட்புறவமைந்த பொற்புடை அறிஞர் பற்பலரைத் தமிழகத்திற்கு உண்டாக்கி அளித்துள்ளது.

விழாத் தலைவர் பாரதிதாசன் ஆன்றபுலமையுடைய சான்ருேராவர் மனவெழுச்சியைச் சித்தரிக்கும் மாண்புடைக் கவிதைகளால் தமிழகத்தைத் தட்டியெழுப்பிய தகைமை சான்றவராவர். அவர் ' எந்த நாளோ ' என்ற தலைப்பில் தமிழகத்தின் எதிர்காலம் எங்ஙனம் இருத்தல்வேண்டும் என்பதை எழிலுற அமைத்துள்ளார்கள். ' மானிடம் என்னுமோர் ஆதிப் பயிர் தமிழ் மக்களென்றே குதித்தாடுவோமே ' எனத் தமிழரின் தொன்மையை எடுத்துக் கூறுகின்ருர் இன்னணம் தொன்மையும் அறனும் திறனும் மறுவறச் செறிந்த தமிழகத்தில் கவியரசர் தமிழ்காவலராய் விளங்கினுர்.

பண்டைக் காலத்தில் தமிழின் நிலை, புலவரின் நிலை மிகவுயர்ந்து மிளிர்ந்திருந்தன. ஒரு அரசனை ஒரு புவவர் பாடினால் அந்நிகழ்ச்சிக்குறிக் கப்படும்பொழுது அரசனை அவன் என்றும் புலவரை அவர் என்றும் உயர் வாகக் கருதி 'அவனை அவர் பாடியது' எனக்குறிக்கப்பட்டுள்ளது. புலமையின் அருமையைத் தமிழகம் எங்ஙனம் உணர்ந்திருந்தது என்ப தற்கு அதுவே தக்க சான்றாகுமன்றோ? ஆயின் இன்று தமிழறிந்தவன் ஆளத்தகுதியற்றவனாகக் கருதப்படுகின்றான். ஆங்கிலத்தை வாழ்க்கை வளத்திற்கெனக் கற்றனர். எனவே தமிழ் நிலை தாழ்ந்தது. புலவருலக மும் தாழ்ந்தது. தமிழின் பெருமையைப் பாராட்டாதவரில்லை. புகழ் மாலைகள் அணிந்த அழகுத் தமிழன் அருமைத் தமிழன் இன்றைய நிலை என்ன? பீடும், பெருமையும் குன்றிக்கேடும் தாழ்வும் உற்று நலிந்து மெலிந்த நிலையிலன்றோ இருக்கின்றது.

இத்தகைய தமிழகத்தில் கவியரசர் பழங்காலப் புலவரைப் போலத் தொண்டாற்றினர். பொருளையே யெண்ணாது தமது உள்ளக் கிடக் கையை அச்சமின்றி எடுத்துரைத்து வந்த பழைய புலவர்களைக் கவியரசர் நமக்கு நினைவூட்டி வந்தார். கவியரசர் தொல்காப்பியச் சொல்லதிகாரத் தெய்வச் சிலையார் உரையினைப் பதிப்பித்தார். தஞ்சையிலும் திருவை யாற்றிலும் கரந்தையிலும் அவர் பெருந் தொண்டாற்றினர். அவர் எத்த கைய சூழ்நிலையிலும் நகைச்சுவை கனியப் பேசும் பெற்றியர்." என்று கூறினர்

பின்னர் கவியரசரின் நகைச்சுவை கனிந்த கதைகள் பலவற்றை எடுத்துக் கூறி அவையோரை சிரிப்பில் மூழ்கித் திளைக்கச் செய்தார். கவியரசர் அவர்களின் மொழிப்படி நடக்கவேண்டும் என்றும், அவர்களது உயர்ந்த கவிதைகளைப் படித்தின்புற வேண்டும் எனவும் கூறித் தன் படத் திறப்பு விழாச் சொற்பொழிவை முடித்தார்.

அதனைத் தொடர்ந்து கல்லூரித் தலைவர் திருவாளர் சுயம்பிரகாசம் அவர்கள் சில செய்திகளைக் கூறினர். நாங்கள் 'கவியரசு நினைவு மலர்' வெளியிட்டுள்ளோம். அதன் விலை 1—0—0 ஆகும். கவியரசர் இறந்த செய்தியறிந்து, சிங்கப்பூர் ஈழம் ஆகிய நாடுகளிலிருந்து செய்திகள் உசாவி வந்தன. அங்கெல்லாம் வானொலியில் அவரைப் பற்றிய செய்திகள் ஒலி பரப்பப் பெற்றன. அனைவரும் கவியரசரின் நினைவு மலரை வாங்கிப் பயின்று இன்புற வேண்டுமென்று கூறித் தன்னுரையை முடித்தார்'.

பின்னர் புரட்சிக் கவிஞர் தன் பின்னுரையைத் துவங்கிச் சொற் பொழிவாற்றினார்கள். முற்கூறிய தளைகளெல்லாம் அறுபடுமாயின் வருங் கால இலக்கியம் வளமுடையதாகத் தூயதாக இருக்கும். இன்று தமிழில் நாம் எண் போடுவதில்லை. தாயை மறப்பது போலத் தமிழை மறந்து திரிகின்றோம். 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்' இன்று ஒரு கண்ணை இழந்து விட்டோம். இன்னொரு கண்ணையும் இழந்து வருகின் றோம். நாம் மீண்டும் அவற்றைப் பெறுவோமா? பெறவேண்டும் பெற முயலவேண்டும்.

தமிழ் மொழியிலேயே அனைத்தையும் எழுதவும் பேசவும் வேண்டும். காட்டாகத் திருமண அழைப்பிதழ்களைத் தூய தமிழில் அச்சிட வேண்டும். தமிழறிஞர்களைக் கொண்டு திருமணம் செய்வித்தல் வேண்டும். வாழ்க்கையின் சிறந்த நிகழ்ச்சியாகிய திருமணத்தில்கூடத் தமிழ்மொழி யிடம் பெறவில்லை யெனில் அதைவிடக் கொடிய செயல் வேறென்னுளது?

இன்றைய தினம் நீதிமன்றங்களில் தமிழ் பயன்படுத்தப் படுவதில்லை. நாம் நம்முடைய குறைகளைக் கூறி முறை வேண்ட இடையில் வேற்று மொழி அறிந்த ஒருவர் வேண்டும்? என்னே இவ்விழிநிலை!

தமிழ் நாட்டை ஆள்கின்றவர்கள் தமிழர்களாக இருக்கவேண்டும். இந்த நாட்டில் பொதுமக்கள் நன்மை கருதி ஆள்கின்றவர்கள். தொண்டு செய்கின்றவர்கள் தமிழ் மொழி அடிப்படையில் செய்யட்டும். மீண்டும் தமிழைத் தன் உயர்நிலைக் கிட்டுச் செல்க. தமிழ் மொழியின் மீட்சியைக் குறிக் கோளாக வைத்துப் பணியாற்றுக. மக்களை ஒன்றுகக் கூட்ட வல்லது மொழி யொன்றே யாகும். எக்கட்சியினரையும், எம்மதத்தினரையும் ஒன்றுக்கவல்லது மொழியே யாம்.

தமிழின் நிலை குலைந்தால் தன்னிலை குலைவதாக எண்ணவேண்டும் மொழியின் பெருமையே தன் பெருமையாகும். தமிழ்மக்கள் தமிழை யறிந்து உணர்ந்து பெருமைசெய்யவேண்டும் எனக் கூறியும், கல்லூரியின் தலைவர் அறிஞர் சுயம்பிரகாசம் அவர்களை உளநிறைந்து பாராட்டியும் தன் பின்னுரையை முடித்தார்.

அடுத்த நிகழ்ச்சியாக 'புலவர் உள்ளம் என்ற நாடகம் நிகழ விருந்தது. அதனிடையே கல்லூரியின் துணைத் தலைவர் உயர்திரு. வித்துவான் இராமநாதன் அவர்கள் மேடையில் தோன்றி நாடகத்தைப்பற்றிய முன்னுரையை வழங்கினர்கள். அவர் அந்த நாடகம், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த புலவனுள்ளத்தை இன்றைய புலவன் கற்பனை செய்து பாடியதாகும். பெருஞ்சித்திரனரின் அரிய வாழ்க்கையை விளக்குவதாகும் எனக் கூறினர். இந் நாடகம் புறநானூற்றில் அவர் பாடிய நான்கு பாடல்களை அடிப்படையாகக் கொண்டதாகும் எனக் கூறிமுடித்தார்கள்.

அடுத்தபடியாக, அனைவரும் ஆவலுந்தும் உளத்தினராய் எதிர் நோக்கியிருந்த, கல்லூரிப் பேராசிரியர் வித்துவான் உயர்திரு. ச. பாலசுந்தரம் அவர்களால் இயற்றப் பெற்ற 'புலவர் உள்ளம்' என்ற கவிதை நாடகம் கவினுறக் கல்லூரி மாணவர்களால் நடிக்கப்பெற்றது. நாடகத்தை நகரப் பெருமக்களும், மாணவர்களும் கண்டுகளித்தனர்.

அழகிய வண்ண ஓவியத்தால் தீட்டப்பெற்ற திரைச் சீலைகளும் காண்போரைக் கவர்ந்தன. இசைக் கருவிகள் இனிய விருந்தாக அமைய அசைய வாரிவாரி வழங்கின. மாணவர்களைக் கல்லூரி ஆசிரியர்களும்,

மாணவர்களுமே கண்டுகொள்ளாவாறு உறுப்புக்குத் தக்க உடை தரித்து ஏற்ப நடித்தார்கள்.

நாடகம் முடிந்த பின்னர் நாடகம்பற்றிய கருத்துரையை வழங்குங்கால் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் இந் நாடகத்தின் பயனாக மாணவர்கள் சிறந்த பயிற்சி யடைந்துள்ளார்களென்று கூறி அவர்களை வாழ்த்தி அருளினார்.

இறுதி நிகழ்ச்சியாகக் கல்லூரியின் துணைத் தலைவர் பேராசிரியர் வித்துவான் ந. இராமநாதன் அவர்கள் நன்றி கூறினார்கள். அவர் நன்றி நவிலுங்கால் 'நாடகத்தை எழுதிய கல்லூரி ஆசிரியரின் எளிமையையும், அரிய புலமையையும், உயர்ந்த பண்பாட்டையும் கூறி நாடகத்தின் அருமையைப் பாராட்டினார். பின்னர் நாடகம் செவ்வையாக நடித்தற்கு வழிகாட்டிய கலைஞர் பாலுவையும், ஆண்டுவிழா நடக்கத் துணை புரிந்த ஏனைய அனைவரையும் பாராட்டினார்கள். அழைப்பிற்கிணங்கி வந்து அரிய சொற்பொழிவாற்றிய புரட்சிக் கவிஞருக்கும், கவியரசரின் படத்திறப்புவிழாவையாற்றிய முன்னாள் கல்லூரித் தலைவரும் இது போழ்து அண்ணாமலைப் பல்கலைக் கழக விரிவுரையாளருமாகிய திருவாளர் புலவர் உ. பழநி அவர்களுக்கும், முன்னாள் கல்லூரி ஆசிரியராகிய திருவாளர் இராமசாமிப்பிள்ளையவர்களுக்கும், மற்றவர்க்கும் நன்றி கூறினார்கள். நம் கல்லூரியைப் பொறுத்தவரையில் நாடகம் இதுதான் முதல் முயற்சியெனவும் அடுத்தாண்டு முதல் மிகச் சீரிய முறையில் நடைபெறும் என்று கூறி அனைவருக்கும் நன்றி நவிலக் கூட்டம் இனிது முடிந்தது.

மாணவர்களும், நகரப் பெருமக்களும் மலர்ந்த முகத்தினராய், மகிழ்ந்த உளத்தினராய்த் தங்கள் இல்லம் ஏகினர். தமிழவேளின் உளங் குளிரக் கொண்டாடிய விழா இனிதே முடிந்தது.

வாழிய தமிழ்.

தொகுத்து வரைந்தவர்:—

செகதீசன்,

கல்லூரி மாணவர்.

Regd. No. M. 4192.

உ

தமிழ்த்தாய் வாழ்க.

# கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.

---

கழக உறுப்பினர்.

திங்கள் வரி :-குறைந்தது நான்கணா. ஆயுள்வரி :-நூறு ரூபா.

நூல் நிலைய உறுப்பினர்.

சங்க உறுப்பினர்க்கு: அரையாண்டிற்கு ஒரு ரூ.

பிறர்க்கு சேர்ப்புக் கட்டணம் எட்டணா. திங்கள் வரி நான்கணா

## தமிழ்ப் பொழிலின் கையொப்பம்.

| முன்பணம் | உள்நாடு | | | வெளிநாடு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. |
| ஆயுள் வரி | ௱ | 0 | 0 | ௱ | 0 | 0 |
| ஆண்டுவரி | | | | | | |
| சங்க உறுப்பினருக்கு | ௨ | 0 | 0 | ௨ | ௮ | 0 |
| ஏனையர்க்கு | ௩ | 0 | 0 | ௩ | ௮ | 0 |

## பழந் தொகுதிகள் குறைந்த விலை.

| | | | |
|---|---|---|---|
| 1,2,4—8 தொகுதிகள் — தொகுதி ஒன்று ரூ. | ௧ | ௮ | 0 |
| 14ஆம் தொகுதி — தொகுதி ஒன்று ரூ. | ௩ | 0 | 0 |
| 3, 9, 10, 11. 12, 13, 15 தொகுதி நீங்கலாக 8 தொகுதிகளையும் மொத்தமாக வாங்கினால் ரூ. | ௰௩ | 0 | 0 |

(அஞ்சற் செலவு வேறு)

3,9,10,11,12,13,15,16, 17, 18, 19, 20, 21 தொகுதிகள் செலவாகி விட்டன.

## அறிவிப்பு.

தமிழ்ப் பொழிலுக்குரிய வரி, கடிதங்கள் அனுப்பும் பொழிலுறுப்பினர்கள் பொருளாளர், கரந்தைத் தமிழ்ச் சங்கம் கருந்திட்டைக்குடி P. O. தஞ்சாவூர் என்ற முகவரிக்கு அனுப்பியுதவ வேண்டுகின்றோம்.

---